[9th August 1960

SRI A. A. RASHEED: May I know whether the Government have received any assurance from Union Government that English will be retained as Union Official Language even after 1965?

THE HON. SRI C. SUBRAMANIAM: The Presidential Order makes reference to that and more than that the Prime Minister of India has given an assurance on the floor of Parliament.

*Mettur Dam*

* 60 *Q.*—SRI P. G. MANICKAM: *கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—*

*மேட்டூர் அணை கட்டியதற்குப் பிறகு அணைக்கட்டில் தேக்கி வைப்பதற்கான அளவுக்கு மேல் தண்ணீர் நிரம்பிய காரணத்தால் அணைக்கட்டுக்கே ஏற்படும் அபாயங்களை தவிர்ப்பதற்காக சர்க்காரால் என்னென்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன?*

THE HON. SRI P. KAKKAN: The Mettur Dam is designed for an F.R.L. of 790.00 and M.W.L. of 796.00 and waters are stored only up to F.R.L. Therefore the question of storing to levels higher than the designed F.R.L. and consequent damages to the Dam does not arise.

SRI P. G. MANICKAM: *அளவுக்கு மேலே அந்த அணைக்கட்டிலே தண்ணீர் வந்துகொண்டிருக்கும்போது அபாயம் ஏற்படும் என அநேக தடவை சர்க்கார் பொது ஜனங்களுக்கு எச்சரிக்கை செய்திருக்கிறது. ஆகையால், அவ்வாறு அளவுக்கு மேலே தண்ணீர் வரக்கூடிய சந்தர்ப்பத்திலே அந்தத் தண்ணீரை ஒரு பக்கம் சேமித்து வைத்து, விவசாயத்திற்குக் கொடுப்பதற்கான திட்டம் ஏதாவது சர்க்காரால் பரிசீலனை செய்யப்பட்டு வருகிறதா?*

THE HON. SRI P. KAKKAN: *மேட்டூர் அணைக்கட்டுக்கு அபாயம் வராத முறையில்தான் அது கட்டப்பட்டிருக்கிறது. 60 அடி நீளம், 20 அடி அகலம் உள்ள 16 ஸ்லூயிஸ்கள் ஒரு பக்கம் இருக்கின்றன. இன்னொரு பக்கம், 716 அடி நீளமுள்ள தண்ணீர் விடுவதற்கான வழியும் செய்யப்பட்டிருக்கிறது. ஆகையால், எப்பொழுதும் அங்கு ஆபத்து இல்லை என்று கனம் அங்கத்தினருக்குத் தெரிவித்துக்கொள்கிறேன். மேட்டூர் அணையிலிருந்து அதிகமான அளவு தண்ணீர் வெளியே விடும்போதுதான் கீழே இருக்கும் பகுதிகளுக்கு அபாயம் இருக்கும். அப்பொழுதுதான் பத்திரமாகப் பார்த்துக்கொள்ளவேண்டும்.*

SRI S. LAZAR: *மேட்டூர் அணையை மேற்கொண்டு பத்து அடி உயரமாகக் கட்டமுடியும் என்று ஆராய்ச்சி செய்து நமது அரசாங்கத்தின் ஒருசில இன்ஜினியர்கள் சொல்லிய கருத்து*

9th August 1960]

அரசாங்கத்தின் கவனத்திற்கு வந்திருக்கிறதா? அப்படியானால், அதைப் பரிசீலனை செய்து மேற்கொண்டு பத்து அடி உயர்த்த அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக்கொள்ளுமா?

THE HON. SRI P. KAKKAN : அந்தத் தகவல் என்னிடம் இப்பொழுது இல்லை. கனம் அங்கத்தினர் தனியாகக் கேள்வி போட்டால் பதில் சொல்லலாம்.

SRI M. KALYANASUNDARAM : தற்சமயம் இருக்கும் நிலைமையைப் பார்க்கும்போது மேட்டூர் அணையில் அளவுக்கு மேல் தண்ணீர் வந்து அபாயம் ஏற்படுவதாக இல்லை. அதற்கு மாறாக, அங்கு வரவேண்டிய அளவு தண்ணீர் வராததால் ஏற்படக்கூடிய அபாயம் இருக்கிறது. வழக்கமாக வரவேண்டிய ஜலம் வர என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது என்பதை அமைச்சர் அவர்கள் சொல்வார்களா?

THE HON. SRI P. KAKKAN : மெர்க்காராவில் நன்றாக மழை பெய்தால் தண்ணீர் தாராளமாக வரும். இப்பொழுது தண்ணீர் நன்றாக வந்துகொண்டிருக்கிறது. இன்றைய தினம் 95 அடி உயரத்திற்குத் தண்ணீர் அதிகமாக வந்திருக்கிறது.

MR. SPEAKER : Questions are over.

**[*Note.*—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]**

## II.—ADJOURNMENT MOTION *re* NON-INCLUSION OF DEVELOPMENT OF TUTICORIN PORT IN THE THIRD FIVE-YEAR PLAN.

MR. SPEAKER : I have received notice of an adjournment motion from hon. Member Sri M. Kalyanasundaram. He wishes to move for the adjournment of the House to discuss a matter of urgent public importance, viz., the failure of the Government to secure the approval of the Planning Commission for inclusion in the Third Five-Year Plan of the Tuticorin Port for development into a major all-weather port as an integral part of the Sethusamudram Project which concerns the interests of Madras State as a whole. How is the matter relevant to be discussed in this House? Will the Hon. Member explain?

SRI M. KALYANASUNDARAM : கனம் சபாநாயகர் அவர்களே, நம்முடைய சபையில் அமைச்சர்கள் அடிக்கடி உறுதி கூறி வந்திருக்கிறார்கள். தூத்துக்குடித் துறைமுகத்தை ஒரு பெரிய துறைமுகமாகக் கட்டாயம் அபிவிருத்தி செய்வதற்குள்ள நடவடிக்கை எடுக்கப்படும் என்று சொல்லி வந்திருக்கிறார்கள். ஒரு விசேஷ தீர்மானம் கூட இந்தச் சபையில் கொண்டுவரப்பட்டு இங்கே விவாதிக்கப்பட்டிருக்கிறது. அந்தச் சமயத்தில் அமைச்சர் உறுதி அளித்திருக்கிறார். அந்தத் தீர்மானம் விவாதிக்கப்பட்டு பல வருஷங்கள் இருக்கும். சமீபத்தில் செய்திகளிலிருந்து பார்க்கும்போது, இந்தத் துறைமுகம் இப்பொழுது அபிவிருத்திக்கு எடுத்துக்கொள்ளப்படாது என்பது தெரிய வருகிறது. நமது அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறது